# மாயா பஞ்சகம்

(மாயை குறித்து ஐந்து ச்லோகங்கள்)

**நிருபம நித்ய நிரம்சகே(அ)ப்யக2ண்டே3**
**மயி சிதி ஸர்வ விகல்பநாதி3சூந்யே ।**
**க4டயதி ஜகதீ3ச ஜீவ பே4த3ம்**
**த்வக4டித - கடநா - படீயஸீ மாயா ॥ 1**

சேர முடியாததைச் சேர்த்துவைப்பதில் மிகத் திறமையுள்ள மாயையானது ஒப்பற்றதும், அழிவற்றதும், கூறுபோட முடியாததும், பிரிவு அற்றதும், வேற்றுமை முதலிய எதுவும் இல்லாததும், ஞான ஸ்வரூபமான என்னிடமும் உலகம் - ஜீவன் - ஈசுவரன் என்ற வேற்றுமையைச் சேர்த்துவைக்கிறது.

**ச்ருதிசத நிக3மாந்த சோத4காந**
**பயஹஹ த4நாதி3: நிதர்சநேந ஸத்3ய: ।**
**கலுஷயதி சதுஷ்பதா3 த்3யபி4ந்நான்**
**அக4டித - க4டநா - படீயஸீ மாயா ॥ 2**

சேரமுடியாததைச் சேர்த்துவைப்பதில் மிகத் திறமையுள்ள மாயையானது நூற்றுக்கணக்கான ச்ருதிகளையும், உபநிஷத்துக்களையும் பரிசோதித்துப் பார்ப்பவர் களையும், பணம் முதலானவைகளைக் காட்டுவதனால் உடனேயே நாலுகால் பிராணிகளைக் காட்டிலும் விசேஷம் இல்லாதவர்களாக மாசுபடுத்துகிறது. ஆச்சர்யம்!

**ஸுக2 சித3க3ண்ட3 விபோ3த4 மத்3விதீயம்**
**வியத3நிலாதி3 விநிர்மிதே நியோஜ்ய ।**
**ப்4ரமயதி ப4வஸாக3ரே நிதாந்தம்**
**தவக4டித க4டநா - படீயஸீ மாயா ॥ 3**

அகண்ட ஆனந்த சைதன்யம் போன்ற ஸ்வரூபமானதும், இரண்டாவது வலது இல்லாததுமானதை (ஆத்மாவை) ஆகாசம், வாயு முதலியவைகளால் உண்டுபண்ணப்பட்ட (பாஞ்சபௌதிகமான சரீரத்)தில் செலுத்தி இயக சோத துவைப்பதில் திறமையுள்ள மாயை, ஸம்ஸார ஸாகரத்தில் மிகவும் சுழற்றுகிறது.

**அபக3த கு3ண வர்ண ஜாதி பே4தே3**
**ஸுக2சிதி விப்ர விடா3த்3யஹங்க்ருதிம் ச ।**
**ஸ்பு2டயதி ஸுத தா3ர கே3ஹ மோஹம்**
**த்வக4டித க4டநா படீயஸீ மாயா ॥ 4**

குணம், வர்ணம், ஜாதி இவைகளின் வேற்றுமைகள் அற்றதும், ஆனந்த சைதன்ய ரூபமுமான தில் (ஆத்மாவில்) பிராமணன், வைச்யன் முதலான அஹங்

காரத்தையும், பிள்ளை, மனைவி, வீடு இவைகளில் எனது என்ற மயக்கத்தையும், சேராததைச் சேர்ப்பதில் திறமையுள்ள மாயை அழுத்தமாகத் தோற்றுவிக்கிறது.

**விதி4 ஹரி ஹர பே4த3மப்யக3ண்டே3**
**ப3த விரசய்ய பு3தா4நபி ப்ரகாமம் |**
**ப்4ரமயதி ஹரி ஹர விபே4த பா4வான்**
**அக4டிதக4டநா படீயஸீ மாயா || 5**

சேரமுடியாததைச் சேர்த்துவைப்பதில் திறமையுள்ள மாயையானது, பிரிக்கமுடியாத (ப்ரஹ்மத்) திலும் ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் என்ற வேற்றுமையை ஏற்படுத்திப் படித்தவர்களையும், விஷ்ணுவிடமும், சிவனிடமும் வேற்றுமை உணர்ச்சி உள்ளவர்களாக மிகவும் மயக்குவிக்கிறது.

